

# இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

## க.பொ.த. (சாதாரண தர)ப் பரீட்சை - 2022 (2023)

## 80 - தகவல் மற்றும் தொடர்பாடல் தொழினுட்பவியல்

## புள்ளியிடும் திட்டம்





இந்த விடைத்தாள் பரீட்சகர்களின் உபயோகத்துக்காகத் தயாரிக்கப்பட்டது. பிரதம பரீட்சகர்களின் கலந்துரையாடல் நடைபெறும் சந்தர்ப்பத்தில் பரிமாறிக் கொள்ளும் கருத்துக்களுக்கிணங்க, இதில் உள்ள சில விடயங்கள் மாறலாம்.

இறுதித் திருத்தங்கள் உள்ளடக்கப்பட்டுள்ளன.

# 1 Marking instructions

**க.பொ.த (சாதாரண தர)ப் பரீட்சை - 2022 (2023)**
**விடைத்தாள்களுக்குப் புள்ளியிடலுக்கான பொது நுட்ப முறைகள்**

விடைத்தாள்களுக்குப் புள்ளியிடும் போதும், புள்ளிப்பட்டியலில் புள்ளிகளைப் பதியும் போதும் அங்கீகரிக்கப்பட்ட முறையைக் கடைப்பிடித்தல் கட்டாயமானதாகும். அதன் பொருட்டு பின்வரும் முறையில் செயற்படவும்.

1. சகல உதவிப் பரீட்சகர்களும் விடைத்தாள்களுக்குப் புள்ளியிடுவதற்கு சிவப்பு நிற மைப் பேனாவை பயன்படுத்தவும்.
2. பிரதம பரீட்சகர் ஊதாநிற மைப்பேனாவைப் பயன்படுத்த வேண்டும்.
3. சகல விடைத்தாள்களினதும் முதற்பக்கத்தில் உதவிப் பரீட்சகரின் குறியீட்டெண்ணைக் குறிப்பிடவும். இலக்கங்கள் எழுதும் போது தெளிவான இலக்கத்தில் எழுதவும்.
4. இலக்கங்களை எழுதும் போது பிழைகள் ஏற்பட்டால் அவற்றைத் தனிக்கோட்டினால் கீறிவிட்டு, மீண்டும் பக்கத்தில் சரியாக எழுதி, ஒப்பம் இடவும்.
5. ஒவ்வொரு வினாவினதும் உபபகுதிகளின் விடைகளுக்காக பெற்றுக்கொண்ட புள்ளியைப் பதியும் போது அந்த வினாப்பகுதிகளின் இறுதியில் △ இன் உள் பின்னங்களாகப் பதியவும். இறுதிப் புள்ளியை வினா இலக்கத்துடன் □ இன் உள் பின்னமாகப் பதியவும். புள்ளிகளைப் பதிவதற்கு பரீட்சகர்களுக்காக ஒதுக்கப்பட்ட நிரலை உபயோகிக்கவும்.
6. எண்கணித பரீட்சகரினால் புள்ளிகள் பிழையற்றது என உறுதிப்படுத்த நீலநிற அல்லது கறுப்புநிறப் பேனாவினை உபயோகிக்கவும்.

**உதாரணம் - வினா இல 03**

(i) .................................................... ✓ $\frac{4}{5}$

(ii) .................................................... ✓ $\frac{3}{5}$

(iii) .................................................... ✓ $\frac{3}{5}$

(03) $(i)\ \frac{4}{5} + (ii)\ \frac{3}{5} + (iii)\ \frac{3}{5} = \boxed{\frac{10}{15}}$

**பல்தேர்வு விடைத்தாள்**

1. **துளைத்தாள் தயாரித்தல்**
   I. புள்ளி வழங்கும் திட்டத்தின் படி சரியான தெரிவைத் துளைத்தாளில் அடையாளமிடவும்.
   II. அவ்வாறு அடையாளமிடப்பட்ட இடத்தை வெட்டி நீக்கித் துளைத்தாளைத் தயாரிக்கவும்.
   III. துளைத்தாளை விடைகளின் மீது சரியாக வைத்துக் கொள்ளக்கூடியதாகச் சுட்டெண் அடைப்பையும் வெட்டி நீக்கவும். சரியான விடைகளின் எண்ணிக்கையைக் காட்டும் அடைப்பையும் வெட்டி நீக்கவும்.
   IV. சரியான, பிழையான விடைகளை குறிப்பிடக்கூடியதாக ஒவ்வொரு வரிசைக்கும் இறுதியில் வெற்று நிரையொன்றை வெட்டி ஏற்படுத்திக் கொள்ளவும்.
   **V. வெட்டிக்கொண்ட துளைத்தாளில் பிரதம பரீட்சகரிடம் கையொப்பம் பெற்று அங்கீகரித்துக் கொள்ளவும்.**
2. அதன் பின்னர் விடைத்தாளை நன்கு பரிசீலித்துப் பார்க்கவும். ஏதாவது வினாவுக்கு, ஒரு விடைக்கும் அதிகமாக குறியிட்டிருந்தாலோ, ஒரு விடைக்காவது குறியிடப்படாமலிருந்தாலோ தெரிவுகளை வெட்டிவிடக்கூடியதாக

கோடொன்றைக் கீறவும். சில வேளைகளில் பரீட்சார்த்தி முன்னர் குறிப்பிட்ட விடையை அழித்து விட்டு வேறு விடைக்குக் குறியிட்டிருக்க முடியும். அவ்வாறு அழித்துள்ள போது நன்கு அழிக்காது விட்டிருந்தால், அவ்வாறு அழிக்கப்பட்ட தெரிவின் மீதும் கோடிடவும்.

3. துளைத்தாளை விடைத்தாளின் மீது சரியாக வைக்கவும். சரியான விடையை √ அடையாளத்தாலும் பிழையான விடையை X அடையாளத்தாலும் இறுதி நிரலில் அடையாளமிடவும். சரியான விடைகளின் எண்ணிக்கையை அவ்வத் தெரிவுகளை உரிய நிரையின் கீழ் எழுதவும். அத்துடன் அவற்றை கூட்டி சரியான புள்ளியை உரிய கூட்டில் எழுதவும்.

**கட்டமைப்பு கட்டுரை மற்றும் கட்டுரை விடைத்தாள்கள்**

1. பரீட்சார்த்திகளினால் விடைத்தாளில் வெறுமையாக விடப்பட்டுள்ள இடங்களையும், பக்கங்களையும் குறுக்குக் கோடிட்டு வெட்டிவிடவும், **பிழையான பொருத்தமற்ற விடைகளுக்குக் கீழ் கோடிடவும். புள்ளி** வழங்கக்கூடிய **இடங்களில் √ அடையாளமிட்டு அதனைக் காட்டவும்.**
2. புள்ளிகளை குறிப்பிடும் போது ஓவலைண்ட் கடதாசியின் இடது பக்க நிரலைப் பயன்படுத்தவும்.
3. சகல **வினாக்களுக்கும்** கொடுத்த முழுப் புள்ளியை விடைத்தாளின் **முன்பக்கத்திலுள்ள** பொருத்தமான பெட்டியினுள் **வினா** இலக்கத்திற்கு நேராக 2 **இலக்கங்களில் பதியவும்,** வினாத்தாளில் உள்ள அறிவுறுத்தலின் படி வினாக்கள் தெரிவு செய்யப்படல் வேண்டும். எல்லா **வினாக்களினதும்** புள்ளிகளும் முதல் பக்கத்தில் பதியப்பட்ட பின் விடைத்தாளில் **மேலதிகமாக** எழுதப்பட்டிருக்கும் விடைகளின் புள்ளிகளில் குறைவான **புள்ளிகளை** வெட்டிவிடவும்.
4. மொத்தப் **புள்ளிகளைக்** கவனமாக கூட்டி முன்பக்கத்தில் உரிய கூட்டில் பதியவும். **விடைத்தாளில்** ஒவ்வொரு விடைக்கும் வழங்கப்பட்டுள்ள புள்ளிகளின் தொகையினை ஒவ்வொரு பக்கமாக கூட்டவும். அக்கூட்டுத்தொகை உங்களால் முன்பக்கத்தில் **மொத்தம்** எனக் குறிப்பிட்ட மொத்தப்புள்ளிகளுக்கு சமமானதா? என பரீட்சிக்கவும்.

★ **புள்ளிப்பட்டியல் தயாரித்தல்**

I. ஒரு வினாப்பத்திரம் உள்ள பாடங்கள் தவிர ஏனைய சகல பாடங்களுக்குமான இறுதிப்புள்ளி குழுவினுள் கணிப்பிடப்பட மாட்டாது.

II. **ஒவ்வொரு வினாப்பத்திரத்துக்குமான** இறுதிப்புள்ளி **தனித்தனியான** புள்ளிப்பட்டியலில் பதியப்படவேண்டும்.

III. **வினாப்பத்திரம்** I இற்கான புள்ளிப்பட்டியலில் **"Total Marks"** என்ற நிரலில் பதிந்து **எழுத்திலும் எழுத வேண்டும்.**

IV. **வினாப்பத்திரம்** II இற்கான புள்ளிப்பட்டியலை தயார் **செய்யும்** போது பகுதிப் புள்ளிகளைப் **பதிவதோடு வினாப்பத்திரம் II இன் இறுதிப் புள்ளிகளை** புள்ளிப் **பட்டியலில் "Total Marks"** என்ற நிரலில் பதியவும்.

V. 43 **சித்திரப்** பாடத்திற்குரிய I,II மற்றும் III ஆம் **வினாப்பத்திரங்களுக்குரிய** புள்ளிகளை தனித்தனியாக புள்ளிப்பட்டியலில் பதிந்து **எழுத்திலும் எழுத வேண்டும்.**

VI. 21 - சிங்களமொழியும் இலக்கியமும், 22 - தமிழ்மொழியும் இலக்கியமும் ஆகிய இரு பாடங்களும் வினாப்பத்திரம் I இற்குரிய புள்ளிப் பட்டியலில் பதிந்து எழுத்திலும் எழுத வேண்டும். வினாப்பத்திரம் II, III இற்கான பகுதிப் புள்ளிகளை உள்ளடக்கி அவ் வினாப்பத்திரத்தின் மொத்தப் புள்ளிகளை, புள்ளிப்பட்டியலில் பதிய வேண்டும்.

**முக்கிய குறிப்பு:**

I. சகல சந்தர்ப்பங்களிலும் ஒவ்வொரு வினாப்பத்திரத்திற்கும் உரிய முழுப் புள்ளியானது முழுத்தானத்தில் புள்ளிப் பட்டியலில் பதியப்படுதல் வேண்டும். எந்த விதமான காரணங்களிற்காகவும் வினாப்பத்திரத்தின் **இறுதிப் புள்ளியானது** தசம தானங்களில் பதியப்படலாகாது.

II. புள்ளிப் பட்டியலின் சகல பக்கங்களிலும் புள்ளிகளைப் பதிந்த உதவிப்பரீட்சகர், புள்ளிகளை சரிபார்த்த உதவிப்பரீட்சகர், மதிப்பீட்டுப் புள்ளிகளை உறுதிப்படுத்தும் எண்கணித பரீட்சகர் மற்றும் பிரதம பரீட்சகர் தமது குறியீட்டு இலக்கத்தை எழுதி கையொப்பமிட்டு உறுதிப்படுத்துவது கட்டாயமாகும்.

# 2 Question paper

022053

OL/2022(2023)/80/T-I, II



ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

**80 | T | I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2022(2023)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2022(2023)
**General Certificate of Education (Ord. Level) Examination, 2022(2023)**

තොරතුරු හා සන්නිවේදන තාක්ෂණය I, II
தகவல், தொடர்பாடல் தொழில்நுட்பவியல் I, II
Information & Communication Technology I, II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
*Three hours*

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாத்தாளை வாசித்து, வினாக்களைத் தெரிவு செய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

## தகவல், தொடர்பாடல் தொழில்நுட்பவியல் I

**அறிவுறுத்தல்கள் :**

※ **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.

※ **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.

※ உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.

※ அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, அவற்றைப் பின்பற்றுக.

**1.** ஒரு பாடசாலைக்குக் கணினிச் சாதனங்களை அன்பளிப்புச் செய்வதற்கு ஒரு சங்கம் விரும்புகின்றது. பாடசாலை அதன் நூலக முகாமைத்துவ முறைமையை அபிவிருத்தி செய்வதற்கு உத்தேசித்திருப்பின், பின்வரும் எவ்வன்பொருள்கள் பாடசாலைச் சங்கத்திலிருந்து வேண்டிப் பெற்றுக்கொள்வதற்கு உகந்தனவாகும்?
(1) மேசைக் (desktop) கணினி, பட்டைக் குறிமுறை வாசிப்பான் (barcode reader)
(2) மேசைக் கணினி, வரைவி (plotter)
(3) மடிக் கணினி (laptop), இயக்குபிடி (joystick)
(4) மடிக் கணினி, ஒளிப் பேனா (light pen)

**2.** பின்வரும் எப்பட்டியலில் **வெளியீட்டுச்** (output) சாதனங்கள் மாத்திரம் இடம்பெறுகின்றன?
(1) பட்டைக் குறிமுறை வாசிப்பான், காந்த மை எழுத்துரு வாசிப்பி (magnetic ink character reader), வருடி (scanner)
(2) இயக்குபிடி, நுணுக்குப்பன்னி (microphone), வலைக்கமரா (webcam)
(3) சாவிப்பலகை, ஒளிப் பேனா, சுட்டி (mouse)
(4) வரைவி, எறிவை (projector), ஒலிபெருக்கி (speaker)

**3.** காட்டப்பட்டுள்ள சாதனத்தை ஒத்த ஒரு சாதனம் கட்டடக் கலைஞர்களினால் (architects) வழக்கமாகப் பயன்படுத்தப்படுகின்றது. அது எது?



(1) புள்ளி அமைவுரு (dot matrix) அச்சுப்பொறி
(2) மை பீச்சு (inkjet) அச்சுப்பொறி
(3) பல்லூடக எறிவை (multimedia projector)
(4) வரைவி (plotter)

**4.** பயனர் ஒரு கணினிச் செய்நிரலை நிறைவேற்றும்போது (execute) அறிவுறுத்தற் (instruction) பாய்ச்சலின் சரியான வரிசையைப் பின்வரும் எது காட்டுகின்றது?
(1) வன்வட்டு → பதுக்கு (cache) நினைவகம் → முதன்மை நினைவகம் → பதிவகங்கள் (registers)
(2) வன்வட்டு → முதன்மை நினைவகம் → பதுக்கு நினைவகம் → பதிவகங்கள்
(3) முதன்மை நினைவகம் → வன்வட்டு → பதிவகங்கள் → பதுக்கு நினைவகம்
(4) பதிவகங்கள் → வன்வட்டு → பதுக்கு நினைவகம் → முதன்மை நினைவகம்

[பக். 2 ஐப் பார்க்க

5. இணையத்துடன் தொடுக்கப்பட்ட ஒரு கணினி வலையமைப்பு பின்வரும் உருவில் காட்டப்பட்டுள்ளது.




பின்வரும் எப்பட்டியலில் சாதனங்கள் (devices) A–D சரியாகக் காட்டப்பட்டுள்ளன?

(1) A – தீச்சுவர் (firewall), B – ஆளி, C – அச்சுப்பொறி, D – வழிப்படுத்தி (router)
(2) A – தீச்சுவர், B – அச்சுப்பொறி, C – வழிப்படுத்தி, D – ஆளி
(3) A – வழிப்படுத்தி, B – தீச்சுவர், C – ஆளி, D – அச்சுப்பொறி
(4) A – வழிப்படுத்தி, B – ஆளி, C – அச்சுப்பொறி, D – தீச்சுவர்

6. பின்வருவனவற்றில் பெரியது எது?
(1) $1000\ 0100_2$ (2) $15_8$ (3) $85_{10}$ (4) $C2_{16}$

7. பின்வரும் எது இரும் $1000\ 0101_2$ இன் பதின்மச் சமவலுவாகும்?
(1) $85_{10}$ (2) $133_{10}$ (3) $161_{10}$ (4) $266_{10}$

8. பின்வரும் எது எண்ம $1156_8$ இன் பதினறுமச் சமவலுவாகும்?
(1) $26E_{16}$ (2) $484_{16}$ (3) $109C_{16}$ (4) $2204_{16}$

9. தரப்பட்ட பருமன் உள்ள பின்வரும் நான்கு கோப்புகளையும் அமரா ஒரு USB இயக்கியில் நகல் செய்ய வேண்டியுள்ளது.

invitation.doc (15kB), yesterday.mp3 (26MB), concert.mp4 (150MB), tajmahal.jpg (28kB)

கொள்திறன்கள் தரப்பட்ட பின்வரும் நான்கு வெற்று USB இயக்கிகளிடையே மேற்குறித்த கோப்புகளைத் தேக்கி (store) வைப்பதற்குப் பயன்படுத்தத்தக்க மிகவும் சிக்கனமான இயக்கி யாது? (கோப்பு முகாமைக்குத் தேவைப்படும் USB இயக்கியில் உள்ள வெளியைப் புறக்கணிக்க.)
(1) 1GB (2) 2GB (3) 128MB (4) 256MB

10. கீழே தரப்பட்டுள்ள ASCII அட்டவணையிலிருந்து எடுக்கப்பட்டுள்ள பின்வரும் வரியுரு - பெறுமானப் படமாக்கல்களைக் கருதுக.

O - 79 / - 47 L - 76 o - 111 l - 108

O/L இன் ASCII வகைகுறிப்பு பின்வரும் எதில் ஓர் இருமமாகக் காட்டப்பட்டுள்ளது?
(1) 1001111 1001100 (2) 1101111 1101100
(3) 1001111 0101111 1001100 (4) 1101111 0101111 1101100

11. பின்வரும் தருக்கப் படலையைக் கருதுக.




A=1 ஆக இருக்கும்போது, Q இன் வெளியீடு உறுதியாக யாது?
(1) 0 (2) 1
(3) $B$ (4) $\overline{B}$

12. ஒரு சொல் முறைவழிப்படுத்தற் பிரயோகத்தில் உங்களுடைய இறுதிச் செயலை அல்லது செயல்களை நீக்குவதற்குரிய (undo) குறுக்குவழிச் சாவிச் சேர்மானம் யாது?
(1) Ctrl+H (2) Ctrl+N (3) Ctrl+Y (4) Ctrl+Z

13. ஒரு தெரிந்தெடுத்த உரையை (text) இரு வெவ்வேறு வகையான பட்டியல்களாக மாற்றுவதற்குப் பின்வரும் எந்தப் படவுருச் (icon) சோடியைப் பயன்படுத்தலாம்?
(1) (2) (3) (4)

14. ஒரு சொல் முறைவழிப்படுத்தல் மென்பொருள் தொடர்பாகப் பின்வருவனவற்றில் எவை உண்மையானவை?
A - ஓர் ஆவணத்தின் ஓர் அட்டவணையில் (table) உள்ள எவையேனும் இரு கலங்களை (cells) ஒன்றிணைக்கலாம் (merge).
B - ஓர் ஆவணத்தில் உள்ள ஒரு சொல் மீது சுட்டியை இருதடவை சொடுக்குவதன் மூலம் அச்சொல்லைத் தெரிந்தெடுக்கலாம் (select).
C - ஏற்கெனவே சேமித்த ஓர் ஆவணத்தை வேறொரு பெயரைப் பயன்படுத்திச் சேமிப்பதற்கு "File → Save as" விருப்பத்தெரிவைப் பயன்படுத்தலாம்.
(1) A, B ஆகியன மாத்திரம் (2) A, C ஆகியன மாத்திரம்
(3) B, C ஆகியன மாத்திரம் (4) A, B, C ஆகிய எல்லாம்

[பக். 3 ஐப் பார்க்க

0003583

15. பின்வருவனவற்றுள் ஒரு சொல் முறைவழிப்படுத்தல் மென்பொருளில் உள்ள முழு ஆவணத்தையும் தெரிந்தெடுப்பதற்குரிய குறுக்குவழிச் சாவிச் சேர்மானம் யாது?
(1) Ctrl+A (2) Ctrl+C (3) Ctrl+N (4) Ctrl+X

● **16, 17** ஆகிய வினாக்களுக்கு விடை எழுதுவதற்குப் பின்வரும் விரிதாள் கூறைக் கருதுக.

| | A | | | |
|---|---|---|---|---|
| | 3 | 2 | 4 | |
| 2 | 5 | 7 | 6 | |
| | 8 | 9 | 1 | |

16. கலம் D1 இற்குச் சூத்திரம் =COUNT(A1:C1, B2) நுழைக்கப்படும்போது அதில் எது காட்சிப்படுத்தப்படும்?
(1) 3 (2) 4 (3) 7 (4) 9

17. கலம் D3 இற்குச் சூத்திரம் =A1^C3*(C1–B1) நுழைக்கப்படும்போது அதில் எது காட்சிப்படுத்தப்படும்?
(1) 6 (2) 9 (3) 10 (4) 79

18. பின்வருவனவற்றில் (I, II, III, IV) எவை செல்லுபடியான கல முகவரிகளாகும்?
I – K2 II - $K$2 III – K2$ IV – K$2$
(1) I, II ஆகியன மாத்திரம் (2) I, IV ஆகியன மாத்திரம்
(3) II, III ஆகியன மாத்திரம் (4) III, IV ஆகியன மாத்திரம்

● **19** தொடக்கம் **22** வரையுள்ள வினாக்களுக்கு விடை எழுதுவதற்குப் பின்வரும் பகுதியாகக் காட்டப்பட்டிருக்கும் தரவுத்தள அட்டவணைகளைக் கருதுக. அவை ஒரு மின் சிட்டை முறைமையின் தரவுத்தளத்திலிருந்து எடுக்கப்பட்டுள்ளன.

**Customer**
(வாடிக்கையாளர் அட்டவணை)

| Cus_ID | Name | Address |
|---|---|---|
| C001 | Anil | Rajagiriya |
| C002 | Shane | Borella |
| C003 | Raj | Nugegoda |
| C004 | Sharaf | Dehiwala |

**Meter**
(மானி அட்டவணை)

| Meter_ID | Cus_ID |
|---|---|
| 001 | C003 |
| 002 | C004 |
| 003 | C001 |
| 004 | C004 |
| 005 | C002 |

**Usage**
(பயன்பாடு அட்டவணை)

| Meter_ID | Date | Meter_Reading |
|---|---|---|
| 001 | 28/02/2023 | 1000 |
| 002 | 28/02/2023 | 1000 |
| 003 | 28/02/2023 | 1500 |
| 004 | 28/02/2023 | 2500 |
| 001 | 31/03/2023 | 4000 |

19. **Usage** அட்டவணையின் முதன்மைச் சாவி யாது?
(1) *Date* (2) *Meter_ID*
(3) *Meter_ID + Date* (4) *Meter_Reading*

20. *Cus_ID* புலத்திற்கு மிகவும் உகந்த தரவு வகை யாது?
(1) Boolean (2) Currency (3) Number (4) Text

21. மாதாந்த மின் சிட்டைகள் மானி வாசிப்பிற்கு (meter reading) ஏற்பப் பயன்படுத்திய அலகுகளை (units) அடிப்படையாகக் கொண்டு பிறப்பிக்கப்படுகின்றன. அனிலின் (Anil) மாதாந்த மின் சிட்டையைப் பிறப்பிப்பதற்குப் பின்வரும் எவ்வட்டவணையைப் / அட்டவணைகளைப் பயன்படுத்த வேண்டும்?
(1) **Usage** மாத்திரம் (2) **Customer, Meter** ஆகியன மாத்திரம்
(3) **Customer, Usage** ஆகியன மாத்திரம் (4) **Customer, Meter, Usage** ஆகிய எல்லாம்

22. அடுத்த மாத மானி வாசிப்புகளை நுழைக்கும்போது எந்த அட்டவணை / அட்டவணைகள் இற்றைப்படுத்தப்பட வேண்டும்?
(ஒரு மாதத்தின்போது புதிய வாடிக்கையாளர்கள் / மானிகள் (**customers/meters**) சேர்க்கப்படுவதில்லையெனக் கொள்க.)
(1) **Customer** மாத்திரம் (2) **Meter** மாத்திரம்
(3) **Usage** மாத்திரம் (4) **Meter, Usage** ஆகியன மாத்திரம்

23. மாணவன் ஒருவன் பாடசாலை வலைத்தளத்தை விருத்தி செய்கின்றான். வலைத்தளத்தின் பக்கங்கள் விரைவாகத் திறத்தல் பாடசாலையின் தேவைகளில் ஒன்றாகும். அத்தேவையை நிறைவேற்றுவதற்கு வலைத்தளத்தின் வரைவியலுக்காக (graphics) மாணவன் பின்வரும் எந்தக் கோப்பு வகையைப் பயன்படுத்த வேண்டும்?
(1) JPEG (2) MP3 (3) RAW (4) WAV

[பக். 4 ஐப் பார்க்க

022053



**24.** பிரிதிறன் (resolution) 2400 × 3000 ஐ உடைய ஒரு பரவல் (raster) விம்பம் ஒவ்வொரு பிக்செல்லினதும் தகவலைப் பேணுவதற்கு 24 பிற்றுகளைப் பயன்படுத்துகின்றது. அவ்விம்பத்திற்குப் பயன்படுத்தத்தக்க நிறங்களின் உயர்ந்தபட்ச எண்ணிக்கை யாது?

(1) 24 (2) $24 \times 2400 \times 3000$ (3) $2^{24}$ (4) $2^{7200000}$

- தரப்பட்ட பாய்ச்சற் கோட்டுப்படத்தைப் பயன்படுத்தி 25 தொடக்கம் 27 வரையுள்ள வினாக்களுக்கு விடை எழுதுக.

ஆரம்பம்
N ஐ உள்ளீடு செய்க
X = 1
N = 1?
இல்லை
X = X*N
N = N−1
ஆம்
X ஐ அச்சிடுக
முடிவு

**25.** உள்ளீடாக 3 ஐ வழங்கும்போது பாய்ச்சற் கோட்டுப்படத்தின் வெளியீடு யாது?

(1) 1 (2) 3
(3) 6 (4) 24

**26.** இப்பாய்ச்சற் கோட்டுப்படத்தை அடிப்படையாகக் கொண்ட ஒரு கணினிச் செய்நிரலில் நுழைப்பதற்குப் பின்வரும் எந்தக் கட்டமைப்பு / கட்டமைப்புகள் மிகவும் பொருத்தமானது / பொருத்தமானவை?

A - *if then*
B - *if then else*
C - *while - endwhile*

(1) A மாத்திரம் (2) B மாத்திரம்
(3) C மாத்திரம் (4) B, C ஆகியன மாத்திரம்

**27.** இந்நெறிமுறையில் (algorithm) N எப்போதும் ஒரு நேர் நிறைவெண்ணாக இருத்தல் வேண்டும். மேற்குறித்த நிபந்தனையை நிறைவேற்றுவதற்குப் பாய்ச்சற் கோட்டுப்படத்திற்குப் பின்வரும் எதனை விதந்துரைக்கலாம்?

(1) பாய்ச்சற் கோட்டுப்படத்தை இருக்கும் விதத்திலேயே வைத்துக்கொள்ளல்
(2) N=1? நிபந்தனையை N=0? ஆக மாற்றுதல்
(3) N=1? நிபந்தனையை N=−1? ஆக மாற்றுதல்
(4) N ஐ உள்ளீடு செய்ததும் அதன் பெறுமானத்தைச் செவ்வை பார்த்து N மறையெனின் பாய்ச்சலை நிறுத்துதல்

**28.** கடந்த ஆண்டின் ஒவ்வொரு மாதத்திலும் ஒரு முட்டையின் சராசரி விலை அணி (array) A இல் இடம்பெறுகின்றது.

| A: | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 20 | 25 | 50 | 55 | 70 | 65 | 50 | 60 | 65 | 50 | 55 | 49 |

எந்த அணியின் மூலகத்தில் அதியுயர்ந்த சராசரி விலை உள்ளது?

(1) A[0] (2) A[4] (3) A[10] (4) A[11]

**29.** பின்வரும் பஸ்கால் குறிமுறை நிறைவேற்றப்படும்போது வெளியீடு யாது?

```
Program testPrint(input, output);
Var count: integer;
Begin
     For count:=1 to 4 do
       Write(count);
End.
```

(1) 1
(2) 4
(3) 123
(4) 1234

**30.** பின்வரும் போலிக்குறிமுறை 1 தொடக்கம் 10 வரையுள்ள எண்களின் கூட்டுத்தொகையைக் காண்பதற்காகும். முகப்படையாளம் A இற்கு உகந்த மாற்றீடு யாது?

```
Begin
     sum = 1
     number = 1
     repeat
          A
          sum = sum + number
     until number < 10
     display sum
End
```

(1) number = number + 1
(2) number + 1
(3) number = 0
(4) sum = 2

[பக். 5 ஐப் பார்க்க

0003581

31. பின்வரும் போலிக்குறிமுறையைக் கருதுக.

```
Begin
    P = 0
    while P<6
        display '*'
        P = P + 3
    endwhile
End
```

அதற்கேற்ப * எத்தனை தடவை அச்சிடப்படும்?

(1) 1
(2) 2
(3) 3
(4) 4

32. பின்வரும் போலிக்குறிமுறைத் துண்டைக் கருதுக.

```
if weakness < 40
    if character > 70
        suitability = "Good"
    endif
endif
```

பின்வரும் எது உண்மையானது?

(1) weakness < 40 எனின், suitability = "Good" ஆகும்.
(2) character > 70 எனின், suitability = "Good" ஆகும்.
(3) weakness < 40 ஆகவும் character > 70 ஆகவும் இருப்பின் suitability = "Good" ஆகும்.
(4) weakness < 40 அல்லது character > 70 ஆக இருப்பின் suitability = "Good" ஆகும்.

33. பின்வரும் கூற்றுகளைக் கருதுக.

A - ஒரு இயந்திர மொழிக் குறிமுறை 0 களையும் 1 களையும் கொண்டுள்ளது.
B - ஒரு பஸ்கால் செய்நிரலை அதன் இயந்திர மொழிச் சமவலுவிலும் பார்க்க எளிதாக விளங்கிக் கொள்ளலாம்.
C - ஒரு பஸ்கால் குறிமுறை அதன் இயந்திர மொழிச் சமவலுக் குறிமுறையாக மாற்றப்படுவதற்குத் தொகுக்கப்படுதல் (compile) வேண்டும்.

மேற்குறித்தவற்றில் சரியான கூற்று / கூற்றுகள் யாது / யாவை?

(1) A மாத்திரம்
(2) A, B ஆகியன மாத்திரம்
(3) A, C ஆகியன மாத்திரம்
(4) A, B, C ஆகிய எல்லாம்

34. முறைமை அபிவிருத்தி ஆயுள் வட்டத்தின் (System Development Life Cycle) தெரிந்தெடுத்த செயற்பாடுகளைப் பின்வரும் எது சரியான வரிசையில் காட்டுகின்றது?

(1) குறிமுறையாக்கல் (coding) → தீர்வை வடிவமைத்தல் (solution design) → தேவையை இனங்காணல் (requirement identification) → சோதித்தல் (testing) → நிறுவுகை (deployment)
(2) தேவையை இனங்காணல் → தீர்வை வடிவமைத்தல் → குறிமுறையாக்கல் → சோதித்தல் → நிறுவுகை
(3) தீர்வை வடிவமைத்தல் → குறிமுறையாக்கல் → தேவையை இனங்காணல் → நிறுவுகை → சோதித்தல்
(4) தீர்வை வடிவமைத்தல் → தேவையை இனங்காணல் → குறிமுறையாக்கல் → நிறுவுகை → சோதித்தல்

35. பல அலகுகளைக் கொண்ட ஒரு சிக்கலான மென்பொருள் முறைமை விருத்தியாக்கப்படுகிறதெனக் கொள்க. இவ்விருத்தியுடன் சம்பந்தப்பட்ட சோதனை வகைகளை எது அவற்றின் சரியான வரிசையில் காட்டுகின்றது?

(1) பயனர்களின் ஏற்புச் (acceptance) சோதனை → முறைமைச் (system) சோதனை → அலகுச் (unit) சோதனை → ஒருங்கிணைப்புச் (integration) சோதனை
(2) ஒருங்கிணைப்புச் சோதனை → பயனர்களின் ஏற்புச் சோதனை → முறைமைச் சோதனை → அலகுச் சோதனை
(3) அலகுச் சோதனை → ஒருங்கிணைப்புச் சோதனை → பயனர்களின் ஏற்புச் சோதனை → முறைமைச் சோதனை
(4) அலகுச் சோதனை → ஒருங்கிணைப்புச் சோதனை → முறைமைச் சோதனை → பயனர்களின் ஏற்புச் சோதனை

36. பின்வரும் எது ஓர் IP முகவரிக்குச் சரியான உதாரணமாகும்?

(1) 255.64.80 (2) 170.63.80.23 (3) 170.248.16.31.56 (4) 192.248.16.300

37. பின்வரும் எது ஆள்களப் பெயர்களை (domain names) IP முகவரிகளாக மொழிபெயர்க்கின்றது?

(1) DNS சேவையகம் (DNS server)
(2) அஞ்சற் சேவையகம் (mail server)
(3) ஊடகச் சேவையகம் (media server)
(4) வலைச் சேவையகம் (web server)

[பக். 6 ஐப் பார்க்க

**38.** அமெரிக்காவிலும் யப்பானிலும் இருக்கும் அலுவலர்களுடன் நடைபெறும் காணொளி மாநாட்டுடன் (video conference) தொடர்புபடுவதற்கு இலங்கையில் உள்ள ஓர் அலுவலருக்குப் பின்வரும் எது **அத்தியாவசியமன்று?**

(1) கமரா, நுணுக்குப்பன்னி, ஒலிபெருக்கி ஆகியவற்றுடன் கூடிய ஒரு கணினி அல்லது ஸ்மார்ட் சாதனம்
(2) ஓர் இணையத் தொடுப்பு
(3) உரிய காணொளி மாநாட்டு மென்பொருள்
(4) USB இயக்கி

**39.** ராஜா தனது சுயவிவரத் திரட்டை (resume) ஓர் இணைப்பாகச் சேர்த்து *abcCompany@gmail.com* இற்கு ஒரு வேலை விண்ணப்ப மின்னஞ்சலை அனுப்புவதற்கு உத்தேசித்துள்ளார். அவர் சுயவிவரத் திரட்டுடன் **இணைப்பதற்கு** மின்னஞ்சல் விண்ணப்பத்தில் பின்வரும் எவ்விருப்பத் தெரிவைப் பயன்படுத்தலாம்?

(1) To (2) **Subject** (3) 📎 (4) ☺

**40.** பின்வரும் எந்த HTML கூற்றில் தொடரியல் (syntax) **பிழையானதாகும்?**

(1) <a href="http://www.railway.gov.lk">Sri Lanka Railways </a>
(2) <h2><center><font face="Arial" color="blue">WORK</font></center></h2>
(3) <img http://www.w3schools.com/images/picture.jpg border = "3">
(4) <p align="right"> Sri Lanka </p>

* *

[பக். 7 ஐப் பார்க்க

0003579

Department of Examinations, Sri Lanka

80 T I, II

அධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2022(2023)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2022(2023)
General Certificate of Education (Ord. Level) Examination, 2022(2023)

තොරතුරු හා සන්නිවේදන තාක්ෂණය I, II
தகவல், தொடர்பாடல் தொழில்நுட்பவியல் I, II
Information & Communication Technology I, II

022053

## தகவல், தொடர்பாடல் தொழில்நுட்பவியல் II

※ முதலாம் வினாவும் வேறு நான்கு வினாக்களும் உட்பட ஐந்து வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.
※ முதலாம் வினாவுக்கு 20 புள்ளிகளும் ஏனைய வினாக்களுக்கு 10 புள்ளிகள் வீதமும் வழங்கப்படும்.

1. (i) நோயாளிகளுக்கு ஏற்படும் வசதியீனங்களை இழிவளவாக்குவதற்குக் கணினிமயப்படுத்தப்பட்ட சந்திப்பு நேரங்களை (appointment) முன்னேற்பாடு செய்தல் (scheduling) முறைமையை நடைமுறைப்படுத்துவதற்கு ஒரு மருத்துவமனையின் வெளிநோயாளர் பிரிவு (OPD) தீர்மானித்துள்ளது. OPD ஆனது ஒவ்வொரு நாளும் மதியம் 12 - பி.ப. 1 மதியபோசன இடைவேளையுடன் மு.ப. 8 தொடக்கம் பி.ப. 5 வரைக்கும் நோயாளிகளுக்குத் திறந்திருக்கும். OPD ஒவ்வொரு மணித்தியாலத்தையும் நான்கு 15 நிமிட வேளைகளாகப் பிரித்து, அத்தகைய ஒவ்வொரு வேளைக்கும் மூன்று நோயாளிகள் வீதம் குறித்தொதுக்குவதற்குத் தீர்மானித்துள்ளது. மேற்கொள்ளப்படும் ஒவ்வொரு சந்திப்பு நேரத்திற்கும் உத்தேசிக்கப்பட்ட அக்கணினி முறைமையில் ஐந்து தகவல்கள் தேக்கிவைக்கப்படும். நோயாளியின் தேசிய அடையாள அட்டை (NIC) எண், பெயர், தொலைபேசி எண் ஆகியன அத்தகவல்களில் மூன்றாகும். ஏனைய இரு தகவல்களையும் எழுதுக.

(ii) ஒரு மடிக் கணினியின் நான்கு துறைகள் (ports) உருவில் Ⓐ தொடக்கம் Ⓓ வரைக்கும் முகப்படையாளம் இடப்பட்டுக் காட்டப்பட்டுள்ளன.

Ⓐ Ⓑ Ⓒ Ⓓ



(a) ஓர் எறிவையை ஒரு VGA வடத்தினால் தொடுப்பதற்குப் பயன்படுத்தத்தக்க துறையின் முகப்படையாளத்தை எழுதுக.

(b) மடிக் கணினியின் முக்கியமான கோப்புகளைக் காப்புச் (backup) செய்வதற்கு USB பளிச்சீட்டு இயக்கி (flash drive) தொடுக்கப்படத்தக்க துறையின் முகப்படையாளத்தை எழுதுக.

(iii) $63_{10}$ ஐ அதன் (a) எண்மச் சமவலுவாகவும் (b) பதினறுமச் சமவலுவாகவும் மாற்றுக.

(iv) காட்டப்பட்டுள்ள சுற்றில் A ஆனது ஓர் 2 – உள்ளீட்டுத் தருக்கப் படலையை வகைகுறிக்கின்றது.




(a) S ஆனது காட்டப்பட்டுள்ள மெய்நிலை அட்டவணைக்கேற்ப இருப்பதற்குப் படலை A ஆனது AND, OR ஆகிய இரு படலைகளில் யாதாக இருத்தல் வேண்டும்?

(b) C இற்கான பூலக் கோவையை எழுதுக.

| X | Y | S |
|---|---|---|
| 0 | 0 | 0 |
| 0 | 1 | 1 |
| 1 | 0 | 1 |
| 1 | 1 | 0 |

(v) ரஜா ஒரு கணினியை இயக்கி ஒரு சொல் முறைவழிப்படுத்திப் பிரயோகத்தைப் பயன்படுத்தி ஓர் ஆவணத்தைத் தட்டச்சிடுகின்றார். பின்னர் அவர் பணிசெயல் முறைமையினூடாகக் கணினியைப் பணிநிறுத்தல் (shut down) செய்கின்றார். இச்சூழ்நிலைக்காட்சியில் அக்கணினியின் முறைவழியாக்கி (processor) மீது ஓடுவது பின்வரும் உருவிற் காட்டப்பட்டுள்ளது.




குறிப்பு : OS – பணிசெயல் முறைமை, WP – சொல் முறைவழியாக்கி

[பக். 8 ஐப் பார்க்க

01040000520112053

I, II, III, IV ஆகியவற்றுக்கு உகந்த மாற்றீடுகளைப் பின்வரும் பட்டியலிலிருந்து தெரிந்தெடுத்து எழுதுக:
பட்டியல் : {BIOS, OS, OS, WP}

(vi) ஒரு சொல் முறைவழிப்படுத்தல் மென்பொருளில் உள்ள சில வடிவமைப்பு விருப்பத்தெரிவுகள் கீழே காட்டப்பட்டுள்ளன.

| விருப்பத் தெரிவு | 12 | **B** | *I* | U | S | $A^2$ | $A_2$ |
|---|---|---|---|---|---|---|---|
| முகப்படையாளம் | P | Q | R | S | T | U | V |

பின்வரும் வாக்கியத்தை வடிவமைப்புச் செய்வதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ள விருப்பத்தெரிவுகளின் முகப்படையாளங்களை எழுதுக.

வடிவமைப்புச் செய்வதற்கு முன்னர் வாக்கியம் : Work is a great remedy for all ailments.

வடிவமைப்புச் செய்த பின்னர் வாக்கியம் : ***Work is a great remedy for all ailments.***

(vii) (a) ஒரு தலைப்பு (title), சில உரைக் குண்டுக்குறிகள் (text bullets), ஒரு விம்பம் (image) ஆகியன அடங்கிய ஒரு படவில்லையை ஒரு முன்வைப்பில் நுழைக்க வேண்டியுள்ளது. உருவில் உள்ள படவில்லைத் தளக்கோலங்களில (layouts) மேற்குறித்த தேவையைப் பூர்த்திசெய்வதற்குப் பயனர் பயன்படுத்தத்தக்க சரியான படவில்லைத் தளக்கோலத்தின் முகப்படையாளத்தை எழுதுக.




(b) ஒரு நல்ல மின்னணு முன்வைப்பில் காணத்தக்க ஏற்றுக்கொண்ட சிறப்பியல்புகள் உள்ளன. ஒரு படவில்லையில் இடவேண்டிய உரை வரிகளின் உயர்ந்தபட்ச எண்ணிக்கை தொடர்பாக அத்தகைய ஒரு சிறப்பியல்பை எழுதுக.

(viii) விளையாட்டு வீரர் ஒருவர் ஒரு விளையாட்டுப் போட்டிக்காக 1 தொடக்கம் 10 வரையுள்ள ஒரு புள்ளியைப் பெறலாம்.

குறித்த விளையாட்டு வீரர் ஒருவர் 10 விளையாட்டுப் போட்டிகளில் பெற்ற புள்ளிகள் ஓர் அணி S இல் பின்வருமாறு தேக்கி வைக்கப்பட்டுள்ளன.

S:

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 10 | 5 | 3 | 4 | 7 | 5 | 9 | 2 | 1 | 7 |

விளையாட்டு வீரர் 5 அல்லது 5 இற்கு மேற்பட்ட புள்ளிகளைப் பெற்ற தடவைகளின் எண்ணிக்கையைக் காண வேண்டியுள்ளது.

அதற்காக வரையப்பட்ட ஒரு பாய்ச்சர் கோட்டுப்படம் உருவிற் காட்டப்பட்டுள்ளது. P, Q ஆகிய முகப்படையாளங்களுக்குரிய சரியான மாற்றீடுகளை எழுதுக.




(ix) நீர்வீழ்ச்சி மாதிரியத்தைப் பயன்படுத்தி உருவாக்கப்பட்ட ஒரு மென்பொருள் முறைமை வெற்றியீட்டுவதற்கு வாடிக்கையாளரின் (பயனர்) எல்லாத் தேவைகளையும் மாதிரியத்தின் முதற் படிமுறையிலிருந்து வெளியேறுவதற்கு முன்னர் நிச்சயமாகவும் தெளிவாகவும் அறியவேண்டியதேன்?

(x) பின்வரும் HTML குறிமுறைக் கூறின் எதிர்பார்த்த வெளியீட்டை (output) வரைக.

```
<dl>
      <dt>HTML</dt>
      <dd>is a markup language</dd>
      <dt>Java</dt>
      <dd>is a programming language</dd>
      <dt>SQL</dt>
      <dd>is a query language</dd>
</dl>
```

[பக். 9 ஐப் பார்க்க

0003577

2. தெரிந்தெடுத்த 12 நாடுகளில் 2010–2021 என்னும் காலப்பகுதியில் சூரிய வலு உற்பத்தி தொடர்பான சில புள்ளிவிபரங்கள் பின்வரும் விரிதாளில் தரப்பட்டுள்ளன.

| | A | B | C | D | E | F | G | H | I | J | K | L | M | N | O |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | Solar electricity in years 2010-2021 (TWh) | | | | | | | | | | | | | | |
| 2 | Country | 2010 | 2011 | 2012 | 2013 | 2014 | 2015 | 2016 | 2017 | 2018 | 2019 | 2020 | 2021 | Increase in 12 years | Increase in 2021 relative to 2020 |
| 3 | Australia | 0.39 | 1.39 | 2.33 | 3.48 | 4.01 | 5.02 | 6.21 | 8.07 | 9.93 | 14.9 | 23.85 | 28.04 | 27.65 | 4.19 |
| 4 | Bangaladesh | 0.07 | 0.06 | 0.09 | 0.13 | 0.16 | 0.2 | 0.22 | 0.25 | 0.28 | 0.33 | 0.39 | 0.47 | 0.4 | 0.08 |
| 5 | China | 0.7 | 2.61 | 3.59 | 8.37 | 23.51 | 39.48 | 66.5 | 118 | 177 | 224 | 261.1 | 327 | 326.3 | 65.9 |
| 6 | Finland | 0 | 0.01 | 0.01 | 0.01 | 0.01 | 0.01 | 0.02 | 0.05 | 0.09 | 0.15 | 0.22 | 0.3 | 0.3 | 0.08 |
| 7 | Greece | 0.16 | 0.61 | 1.69 | 3.65 | 3.79 | 3.9 | 3.93 | 3.99 | 3.79 | 4.43 | 4.45 | 5.25 | 5.09 | 0.8 |
| 8 | India | 0.11 | 0.83 | 2.1 | 3.43 | 4.91 | 6.57 | 11.6 | 21.5 | 36.3 | 46.3 | 58.68 | 68.31 | 68.2 | 9.63 |
| 9 | Malaysia | 0 | 0 | 0.01 | 0.14 | 0.23 | 0.27 | 0.31 | 0.33 | 0.63 | 0.94 | 1.17 | 1.5 | 1.5 | 0.33 |
| 10 | Pakistan | 0.01 | 0.03 | 0.07 | 0.14 | 0.24 | 0.38 | 0.68 | 0.92 | 0.92 | 0.93 | 1.03 | 1.26 | 1.25 | 0.23 |
| 11 | Singapore | 0 | 0.01 | 0.01 | 0.02 | 0.04 | 0.07 | 0.15 | 0.17 | 0.24 | 0.41 | 0.5 | 0.67 | 0.67 | 0.17 |
| 12 | Sri Lanka | 0.02 | 0.02 | 0.02 | 0.03 | 0.03 | 0.03 | 0.05 | 0.11 | 0.23 | 0.36 | 0.44 | 0.54 | 0.52 | 0.1 |
| 13 | United Kingdom | 0.04 | 0.24 | 1.35 | 2.01 | 4.05 | 7.53 | 10.4 | 11.5 | 12.7 | 12.9 | 13.32 | 12.47 | 12.43 | -0.85 |
| 14 | Vietnam | 0.01 | 0.01 | 0.01 | 0.01 | 0.01 | 0.01 | 0.01 | 0.01 | 0.1 | 5.25 | 10.86 | 25.77 | 25.76 | 14.91 |
| 15 | *Lowest increase* | | | | | | | | | | | | | | -0.85 |
| 16 | *Highest increase* | | | | | | | | | | | | | | 65.9 |
| 17 | | | | | | | | | | | | | | | |

மூலம் : https://ourworldindata.org/renewable-energy

(i) 12 ஆண்டுகளில் சூரிய வலு உற்பத்தியின் அதிகரிப்பை (increase in 12 years) நிரல் N காட்டுகின்றது. 2021 இற்கான பெறுமானத்திலிருந்து 2010 இற்கான பெறுமானத்தைக் கழிப்பதன் மூலம் இது கணிக்கப்படுகின்றது.

12 ஆண்டுகளில் அவுஸ்திரேலியாவிற்கான (Australia) அதிகரிப்பைப் பெறுவதற்குக் கலம் N3 இல் நுழைக்க வேண்டிய பொருத்தமான சூத்திரத்தை எழுதுக.

(ii) ஏனைய நாடுகளின் அதிகரிப்புப் பெறுமானங்களைப் பெறுவதற்குக் கலம் N3 இல் நுழைத்த சூத்திரம் கல வீச்சு N4:N14 இல் நகல் செய்யப்படுகின்றதெனக் கொள்க. அப்போது இலங்கைக்கு உரிய அதிகரிப்புப் பெறுமானத்தைக் காட்டும் சூத்திரத்தை (கலம் N12) எழுதுக.

(iii) 2020 தொடர்பாக 2021 இல் சூரிய வலு உற்பத்தியின் அதிகரிப்பைக் (increase in 2001 relative to 2020) காட்டுவதற்கு நிரல் O பயன்படுத்தப்படுகின்றது.

(a) குறைந்தபட்ச அதிகரிப்புப் பெறுமானத்தைக் (lowest increase) காட்டுவதற்குக் கலம் O15 இல் எழுதப்பட வேண்டிய சூத்திரம் யாது?

(b) உயர்ந்தபட்ச அதிகரிப்புப் பெறுமானத்தைக் (highest increase) காட்டுவதற்குக் கலம் O16 இல் எழுதப்பட வேண்டிய சூத்திரம் யாது?

குறிப்பு : இச்சூத்திரங்கள் வடிவம் *=function(cell1:cell2)* இல் எழுதப்படுதல் வேண்டும்.

(iv) அவுஸ்திரேலியாவின் அதிகரிப்புக்கும் உயர்ந்தபட்ச அதிகரிப்புக்குமிடையே உள்ள விகிதத்தைக் காட்டுவதற்குக் கலம் P3 (காட்டப்படவில்லை) இல் சூத்திரம் =(O3/O16)*100 நுழைக்கப்படுகின்றதெனக் கொள்க. எனினும், ஏனைய நாடுகளுக்குரிய விகிதங்களைக் காட்டுவதற்கு இச்சூத்திரத்தைக் கல வீச்சு P4:P14 இல் நகல்செய்தல் போதியதன்று. மேற்குறித்த நோக்கத்தை நிறைவேற்றுவதற்குக் கலம் P3 இற்கு நுழைக்கப்பட வேண்டிய சரியான சூத்திரத்தை எழுதுக.

(v) இந்நாடுகளில் 2010–2021 காலப்பகுதியில் சூரிய வலு உற்பத்தியின் மாற்றங்களை ஒப்பிடுவதற்குக் கோட்டு (line) வரைபுகளிலும் வட்ட (pie) வரைபுகளிலும் எது மிகவும் உகந்தது? உங்கள் விடையைச் சுருக்கமாக நியாயப்படுத்துக

[பக். 10 ஐப் பார்க்க

3. ஒரு பாடசாலை அதன் மாணவர்களுக்குத் தற்காலிகப் பயன்பாட்டுக்காக விளையாட்டு உபகரணங்களை இரவலாகக் கொடுக்கின்றது. இச்செயன்முறையை முகாமிப்பதற்கு மூன்று அட்டவணைகளைக் கொண்ட ஒரு தொடர்புநிலைத் தரவுத்தளம் பயன்படுத்தப்படுகின்றது. அவ்வட்டவணைகளில் மாணவர்களின் விவரங்கள், இரவலாகப் பெறத்தக்க விளையாட்டு உருப்படிகள், இரவலாகப் பெறப்பட்ட விளையாட்டு உருப்படிகள் ஆகியன பின்வருமாறு இடம்பெறுகின்றன.

**Student (மாணவன்)**

| StudentID | StudentName | Grade |
|---|---|---|
| S001 | Saman | 7 |
| S002 | Kamalan | 8 |
| S003 | Shane | 8 |
| S004 | Ahmed | 9 |

**Item (உருப்படி)**

| ItemID | ItemType |
|---|---|
| 001 | Badminton racket |
| 002 | Volleyball |
| 003 | Cricket bat |
| 004 | Basketball |
| 005 | Cricket bat |

**Borrowed_Items (இரவலாகப் பெறப்பட்ட உருப்படிகள்)**

| ItemID | StudentID | BorrowedDateTime | ReturnedDateTime |
|---|---|---|---|
| 002 | S002 | 10/02/2023 14:00:05 | 15/02/2023 14:15:00 |
| 004 | S001 | 13/02/2023 14:08:00 | 01/03/2023 14:16:00 |
| 004 | S002 | 05/04/2023 14:15:00 | NULL |
| 001 | S004 | 05/04/2023 14:20:00 | NULL |
| 002 | S002 | 06/04/2023 14:00:06 | NULL |

(i) (a) **Borrowed_Items** அட்டவணையின் முதன்மைச் சாவியை எழுதுக.

(b) **Borrowed_Items** அட்டவணையின் அந்நியச் சாவியை (சாவிகளை) எழுதுக.

(ii) பின்வருவனவற்றுக்கு இடமளிப்பதற்கு எந்த அட்டவணைகளை இற்றைப்படுத்த வேண்டும்?

(a) ரெனிஸ் ரக்கெற்றுகளை (tennis rackets) இரவலாகப் பெறுவதற்கு மாணவர்களை அனுமதிப்பதற்குப் பாடசாலை தீர்மானித்தல்

(b) 20/04/2023 ஆந் திகதி சேன் (Shane) ஒரு ரெனிஸ் ரக்கெற்றை இரவலாகப் பெறுதல்

(iii) ராஜ் (Raj) என்ற ஒரு புதிய மாணவன் (StudentID : S150) பாடசாலையில் தரம் (Grade) 10 இற் சேர்ந்த அதேவேளை 25/04/2023 ஆந் திகதி கிறிக்கெற் குழுவிற்குத் தெரிந்தெடுக்கப்பட்டான். அதே தினத்தில் அவன் ஒரு கிறிக்கெற் மட்டை (Cricket bat) (ItemID : 005) ஐ 14:00:05 மணித்தியாலத்தில் இரவலாகப் பெற்றான். மேற்குறித்த சூழ்நிலைக்காட்சிக்காக உரிய அட்டவணையுடன் / அட்டவணைகளுடன் சேர்க்கப்பட வேண்டிய புதிய பதிவை / பதிவுகளை எழுதுக.

குறிப்பு : ஒவ்வொரு புதிய பதிவிலும் **அட்டவணையின் பெயர் → (புலம் 1, புலம் 2, ..)** வடிவத்தைப் பயன்படுத்துக.

(iv) 05/04/2023 ஆந் திகதி விளையாட்டு உருப்படிகளை இரவலாகப் பெற்ற மாணவர்களின் பெயர்களைக் காண வேண்டும். இரவலாகப் பெற்ற உருப்படியின் வகையையும் (item type) காட்ட வேண்டும். இந்நோக்கத்திற்காக எந்த அட்டவணைகளை இணைத்தல் வேண்டும்?

[பக். 11 ஐப் பார்க்க

0003578

